# திராவிட நாடு

மலர் 11, இதழ் 26

December 28, 1952

Record no. 1005

*Tirāviṭa nāṭu*

*Malar 11, ital 26*

*December 28, 1952*

Record no. 1005

# ஐ. நா. கமிட்டியில் 'திராவிட' முழக்கம்!

திராவிடநாடு

மலர் 11 | 28—12 52 | இதழ் 26

விலை அணா இரண்டு

## "மனித வரலாற்றுக்கு மகத்தான களஞ்சியம்"

### "செல்வம் கொழிக்கும் திராவிட மொழிகளே"

### பாரிஸ் நகரத்தில் - எச்சரிக்கை

"இந்திய இலக்கியம் என்றதும் உங்கள் கண்முன் சம்ஸ்கிருத இலக்கியங்கள்மட்டுமே காட்சியளிக்கும். அதுமட்டுமே, இந்தியாவின் இலக்கியம் என்று கருதிடாதீர்கள். அதைவிட, பன்மடங்கு சிந்தையள்ளும் செல்வங்கள், திராவிட இலக்கியத்தில் இருக்கின்றன. அவைகளைப் பற்றியும், ஆராயவேண்டுமென்பதை கமிட்டியினருக்கு நினைவுறுத்துகிறேன்.

*

பாரிஸ் நகரத்திலே, பலநாட்டு அறிஞர்களின் மத்தியிலே, இவ்வித எச்சரிக்கையை விடுத்துள்ளார், இந்தியாவிலிருந்து சென்றிருக்கும் சி. பி. மாத்யூ எனும் அறிஞர்.

உலகத்தின் பல்வேறு பாகங்களிலுள்ள மனித இனங்களின்வரலாறு பற்றியும், அவரவர்களின் இலக்கியங்களையும் திரட்டவேண்டுமென்று ஐக்கியநாடு சபையின் கலாச்சாரக் கமிட்டி, பாரிஸ்மா நகரந்திலேகூடி ஆலோசித்தது, டிசம்பர் 6-ல். அதற்கென சுமார் 1,90,400ரூபாய்களைச் செலவிடுவதெனவும் திட்டமிட்டுள்ளது. அந்த ஆலோசனை மண்டபத்திலேதான் அன்பர் மாத்யூ, இவ்வித எச்சரிக்கையை விடுத்துள்ளார். மாத்யூ, இந்தியாவிலிருந்து மேற்படி கமிட்டிக்குச் சென்றிருக்கும் தூதுக்குழு உறுப்பினர்களில் ஒருவர்.

தக்க இடத்தில் அவசியமான விஷயத்தை, சுட்டிக்காட்டியுள்ளார் மாத்யூ. அவருக்கு நமது பாராட்டுதலைத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். அலைகடல் தாண்டி, விண்ணிலே பறந்து, அகில உலக நாடுகளின் முன்நின்று அழகாக ஆர்ப்பரிக்கும் அரசியல் மேதைகள், திராவிட இனத்திலே ஏராளம் உண்டு. ஆனால், அவர்களெல்லாம் அங்கு சென்றால் 'திராவிடம்'குறித்துப் பேசுவதில்லை. இந்தியா ஒன்று என்கிற ஒற்றுமையை உடைத்துக் காட்டுவது அழகல்லஎனும் 'பெருந்தன்மையால்.' அதன் காரணமாகவே, நமது இனப்புகழ்குறித்து எதுவும் பேசுவதில்லை. ஆனால், ஆரியவர்க்கத்தவரோ, சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம், தமது பெருமைகளை விவரிக்கத் தவறுவதில்லை. சச்சிவோத்தம சர். சி. பி. அமெரிக்காவுக்குச் சென்றால் அரைமணி நேரமாவது, சம்ஸ்கிருதத்தின் அருமையைக் குறித்து விளக்கத் தவறமாட்டார்! அடையாறு ருக்மணி, பாரிஸ் மண்டபத்தில் ஆடும் சந்தர்ப்பம் ஏற்பட்டால், 'பகவான்' கிருஷ்ணன் பார்த்தனுக்கு, "கீதா விளக்கம்" தந்த கட்டத்தை ஆடிக்காட்டத் தவறார்! இவ்விதமே சரிதாசிரியர்களும், சகலகலா பண்டிதரும் இந்தியாவைப் பற்றி எது கூற வேண்டுமாயினும், சம்ஸ்கிருதத்தில் ஒரு சுலோகம், இதிகாசங்களில் ஒரு சம்பவம், இவ்விதமே விளக்கி வருகின்றனர் -- எழுதிய நூல்களையும் வெளிநாடுகளில் குவிக்கின்றனர்.

அவர்களின் பிரச்சாரம்! நம்மவரின் உணர்ச்சியற்ற பெருந்தன்மை!! — இதன் விளைவுகளால், வெண்ணிலவை மேகங்கள் மறைப்பதுபோல வீரத்தாலும் விவேகத்தாலும் சிறந்து விளங்கிய திராவிட மக்களின் வரலாறுகள், உலகத்தின் முன் மறைக்கப்பட்டுக் கிடக்கின்றன.

அதனாலேயே, இவ்வித எச்சரிக்கையை, மாத்யூ விடுக்க நேர்ந்தது. அவர் அறிவுறுத்தியிருக்கிறார், "சம்ஸ்கிருதமே உங்கள் மனக்கண் முன் தோன்றும். அதைவிட, ஏராளமான இலக்கியச் செல்வங்கள் திராவிடமொழிகளில் உள்ளன" என்பதாக. அகில உலக நாடுகளின் கண்முன், இந்தியா என்றதும் சம்ஸ்கிருதமே காட்சியளிக்கும் நிலையிருக்கிறது, என்பதை—நன்குணர்ந்ததாலேயே, இவ்விதம், அவர் பேச நேர்ந்திருக்கவேண்டும்.

மாத்யூ—'நமது கூட்டத்தவரல்ல'. ஆனால், உலக இனவரலாறுகளின் உண்மை விளக்கம் உருவாக்கப்படல் வேண்டும் என்ற நல்லெண்ணத்தால், இவ்வித எச்சரிக்கையை வலியுறுத்தியிருக்கிறார். இவ்வித நல்லெண்ணம், அவருக்குத் தோன்றியதற்குக்காரணம், "உலகவரலாறு உண்மையோடு விளக்கப்பட வேண்டும்" எனும், ஆசையாகத்தான் இருக்க முடியும். இத்தகைய நல்லெண்ணங்கொண்டோர், மிக மிகக் கொஞ்சம்—இங்கு. 'திராவிடம்' 'திராவிட மொழி' என்றாலே, 'அவைகளை இல்லையென்று மறுக்க', என்னென்ன ஆதாரம் தேடலாம் என்று முயல்வோரே, அதிகம். அந்தக் கூட்டத்தின், 'திருத்தொண்டின்' விளைவாகத்தான், திராவிடமாபின் பழம்புகழ், உலகக் கண்ணுக்குப் படாமல் கிடக்கிறது! நியுயார்க் நகரிலே மகாபாரதத்தைப் பற்றித் தெரியும்—லண்டன் மாநகரிலே ராமாயண விளக்கம் அறிந்தோர் இருப்பர்—ரஷ்ய பூமியிலே 'சம்ஸ்கிருதம்' புகழ் தெரிந்தோர் இல்லாமலிரார்—இதுபோல, எந்த நாடுகளை யெடுத்துகொண்டாலும், ஆங்காங்கு சம்ஸ்கிருதத்தின்மணம் வீசாமலிருக்காது! ஆனால், 'திராவிட மொழிகள்'? படித்துப் பட்டம் பெற்றோரில் சிலருக்குத் தெரிந்திருக்கலாம், இவ்விதம் 'சில' மொழிகள் இந்தியாவில் உள்ளன வென்று. 'திராவிடர்', 'திராவிட மொழி'—இவ்வித வார்த்தைகளைக் கேள்வியுற்றவராக, உலகில் சிலர் இருந்தாலும், அவர்களிலே பலருக்கு அவைகளைப்பற்றிய உண்மை விளக்கங்கள் எட்டாதகாரணத்தால் இருட்டிலே, கிடக்கிறது—திராவிட இனப் பெருமை. வீழ்ந்துபோன ரோமாபுரியின் சரிதங்கள் ஏராளம், உண்டு! கிரேக்க வீரர்களைக் குறித்து உலகத்தோர் — அறிவர்-புகழ்வர்! பாபிலோன சிறப்பும், எகிப்தின் புகழும் எல்லோரும் மெச்சிப் பாராட்டுவதாக உள்ளது. ஆனால், திராவிட இனத்தின் வரலாறு, விந்தியத்தைத் தாண்டவில்லை. இமயத்துக்கப்பால், எடுத்துச் செல்லப்பட்டதில்லை. புரவியேறி, நாவாய் ஓட்டி, நானில முழுமையும் புகழ் மணக்கச் செய்த ஒரு வீர இனத்தின் வரலாறு— ரோமாபுரியும், ஏதன்சும், பாபிலோனும் எகிப்தும், ஏற்றம் பெறுமுன் சிறப்போடு விளங்கிய திராவிட இனத்தின் வரலாறு—உலகில், எவருக்குமே தெரியாத அளவுக்கு மறைக்கப்பட்டிருக்கிறது. "திராவிடர்" என்றால், யார்? — என்று கேட்கிறார்கள், வெளிநாட்டார். விசித்திர வியாக்யானங்களைக் கூறுகின்றனர், உலகமேதைகள். "திராவிடர், ஆரியருக்குப்பின் வெளியிலிருந்து வந்தோரே!" — என்று கூறுமளவுக்கு, உலகமேதைகளைத் துணியச்செய்கிறது காரணம், அவர்கள், கண்முன் நம்மருந் தொல்காப்பியம்காட்டப்படவில்லை! அவர்களுக்கு "வால்மீகி"யைத் தெரிந்தளவுக்கு "வள்ளுவர்" தெரியார்! அகமும் புறமும், எவ்விதம் உணர்வர், அவர்கள்? சாகுந்தலமும் மகாபாரதமும் குவிக்கப்பட்டால், அவைகளைக் கொண்டுதானே, இந்திய பூமியின் இறந்தகாலத்தைச் சிந்தனை செய்வர்!

மண்டிலங்களை ஆட்டிப்படைத்த ஓர் இனம், கால வெள்ளத்தின் அலைகளைத் தாண்டி நிற்கும் இலக்கியங்களை ஏராளமகப் பெற்றிருந்தும், உலகத்தார் உள்ளத்தில் படாமலே, மறைக்கப்பட்டிருக்கிறது. எத்தகைய விந்தை இது! இந்தத்

(6-ம் பக்கம் பார்க்க)

## நன்றியும் வரவேற்பும்

சடந்த ஆகஸ்டு 8-ந்தேதிமுதல் தஞ்சைப் பொதுக்குழுவரை, தலைமைக் கழகத்தின் பொறுப்பாளராகயிருந்து, தி. மு. கழகம் பொலிவும் வலிவும் பெற்றுத் திகழும் வகையில் பணியாற்றித் தந்த தோழர் இரா நெடுஞ்செழியனுக்கு என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

கழகப் பிரச்சார காரியங்களை ஒருபக்கம் கவனித்துக்கொண்டு, பொறுப்பு மிகுந்த காரியங்களை நிறைவேற்றித்தர, அவர் எடுத்துக் கொண்ட முயற்சிக்கும், அவ்வகை நிறைவேற்றித்தந்த பெருமைக்கும், தி மு. க. அவரைப் பாராட்டுகிறது. கிளைக் கழகத் தேர்தல்களை நடத்தி, கழகப் புதுச் சட்டப்படி எல்லாக் காரியங்களையும் செவ்வனே செய்து, தேர்ந்தெடுக்கப்பட்ட முதல் பொதுக் குழுவையும்கூட்டி, நாமெல்லாம் மகிழும்படி செயலாற்றியிருக்கிறார், தோழர் நெடுஞ்செழியன். சிக்கலும், பொறுப்பும் நிறைந்த பணி. ஆனால், அதனை வெற்றிகரமாக்கித்தந்தார். கழகங்கள் ஒவ்வொன்றிலும் அமைப்பு முறை மலரும் விதத்தில் அவர் ஆற்றித்தந்த, சேவை— மிகமிகக் கடினமானது. மிகமிகக் களிப்பையூட்டக்கூடியது.

கழக ஆக்க வேலைகளைக் கவனித்து, நடத்திச்செல்லவேண்டிய கட்டம், ஆரம்பமாகிவிட்டது. இந்தக் கட்டத்திலே காரியமாற்ற தோழர் கே. ஏ மதியழகனைக் கேட்டுக்கொண்டேன். கடந்த ஒரு வாரகாலமாக பணியாற்றி வருகிறார் என்பதையும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். அவரது கடமைக் காலத்தில் கழக ஆக்க வேலைகள், சிறந்துவிளங்கி நாமெல்லாம் மகிழும்படி பணியாற்றுவார் என எதிர்பார்க்கிறேன்.

பொறுப்பு மிகுந்த நேரத்தில், தனது சங்கடங்களையெல்லாம் பொருட்படுத்தாது, கழகத்தை 'கோட்டை'யாக்கிடும் சிறப்பான பணியாற்றிய நண்பர் நெடுஞ்செழியனுக்கு, என் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொண்டு — இப்போது பணியாற்ற முன்வந்திருக்கும் நண்பர் மதியழகனை, பெருமகிழ்ச்சியோடு வரவேற்கிறேன்,

அவரது பணி வெற்றிகரமாகும்படி, தி. மு. கழகத் தோழர்கள் ஆர்வத்துடன் ஒத்துழைக்கக் கேட்டுக்கொள்கிறேன்.

அறிவகம்
சென்னை

அன்பன்
அண்ணதுரை

## புயல் நிவாரணநிதி: வேண்டுகோள்.

புயலால் தாக்குண்ட மக்களுக்கு உதவும் நோக்குடன், நிதித் தொகையோ அல்லது ஆடை முதலிய இதர வகைகளோ உதவ விரும்புவோர் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பிவைக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். அதன் விபரத்தை மட்டும், 'ஆசிரியர்—திராவிடநாடு' என்று எழுதியனுப்பவும்.

முகவரி:-

மு. கருணாநிதி
செயலாளர்
புயல் நிவாரண நிதிக்குழு

6, வடக்கு கோபாலபுரம்
முதல் தெரு
ராயபேட்டை சென்னை 6.

### புயல்நிவாரண நிதிக்குழு

கடந்தவாரம் பிரசுரிக்கப்பட்ட மேற்படி நிதிக்குழுவில் தோழர் கே. ஏ. மதியழகன் பெயரையும் இணைத்துக்கொள்ளவும்.

★ கைத்தறித் துணிகளையே உடுத்துங்கள் ★

திராவிடநாடு

காஞ்சி] 28—12—52 [ஞாயிறு

# ஜனவரி 4

★

சுகமாகத்தான் இருந்தேன்! இப்போது சோகித்துக் கிடக்கிறேன்!!

மனித உயிர், அனுபவத்தறியாத தொல்லைகளால் துளைக்கப்பட்டேன். மனைவியின் கண்ணீரைக் கண்டேன்! மானமிழக்கவிரும்பாது, அவள் மரக்கிளையில் தொங்கியதையும் இந்தப்பாழும் கண்கள் பார்த்தன!

உயிரோடு துடித்துச் செத்தன, என் குழந்தைகள்.

உலர்ந்தேன்! உருமாறினேன்!! உணர்ச்சியற்ற சடலமானேன்.

உழைத்து, உழைத்து, உடல் அலுத்ததுதான் மிச்சம் — இன்பமில்லை, எனக்கு. இப்போது நான் ஓர் நாடோடி! பிச்சைக்காரன்!!

எள்ளி நகையாடப்படுகிறேன்! — என் கண்ணீர், துடைக்க யாருமில்லை. சென்னை வீதிகளில் அலைந்தேன்—என் சகாக்களுடன் சேர்ந்து கொண்டு. அரசாங்க மாளிகைக்குச் சென்றேன்! எமது கூட்டத்தை. 'பட்டினிப் பட்டாளம்' என்றனர். தாழ்ந்த தலையோடு, சென்றேன் — ஒளியிழந்த கண்களால் நோக்கினேன்.

உயர்ந்த மாளிகை! — அதுதான், அரசாங்கம் நடக்குமிடமாம்.

மந்திரிகளைப் பார்த்தேன் — 'மகராஜர்களே' என்றேன்.

அழுதேன்! அழுதது எம்கூட்டம்!! எட்டிப் பார்த்துவிட்டுப் போயினர். "ஐயா! ஐயா!!" — என்றலறினேன். எவரும் வரவில்லை—போலீசாரைத் தவிர.

லாரியில் ஏற்றப்பட்டேன்!

இழுத்துச் செல்லப்பட்டேன்!

எங்கோ ஓர் மூலையில், விடப்பட்டேன்!

இடம் அறியாத ஊர்! முகம் தெரியாதவர்கள்! — போய்க்கொண்டே இருக்கிறேன்.

விதவிதமான வேதனைச் சம்பவங்களைச் செப்பியவண்ணம், வீதிகளிலே வலம் வந்துகொண்டிருக்கிறார்கள் — இந்நாட்டுக் கைத்தறியாளர்கள். பலப்பல ஊர்களில் சொந்த ஊரைவிட்டு, துரைத்தனத்தார் வாழும் சிங்காரச் சென்னைக்குச் சென்று, பட்டினிப் பட்டாளமாக உலவி, பாராள்வோரின் 'கருணையால்' லாரியில் ஏற்றப்பட்டு, ஆங்காங்கே அலைந்துகொண்டிருக்கிறார்கள். அவர்களைப் பார்க்கும்போது, பாறையும் உருகும்! அவ்வளவு உருமாற்றத்தோடு, விழிகளில் நீரும், 'வாழ்வதா? சாவதா?' எனும் மனப்போராட்டத்தைப் பிரதிபலிக்கும் முகங்களோடு, வீடு வீடாக ஏறி இறங்கிக்கொண்டிருக்கிறார்கள். ஒருவரல்ல, இருவரல்ல — பல்லாயிரக்கணக்கில். வல்லூறுகளுக்கிடையே சிக்கிக்கொண்ட வெண்புறாக்கள்போல், வறுமைக்கும் பட்டினிக்கும் ஆட்பட்டு, அவர்கள் தவிக்கும் காட்சி, விவரிக்கமுடியாது. எறும்புக் கூட்டம் போல, சாரை சாரையாகப் போய்கொண்டிருக்கிறார்கள். அந்த எறும்புகளுக்காவது எங்காவது, ஏதாவது, கிடைக்கும். இவர்களுக்கோ, எதுவுமில்லை—'இந்த உலகில் வாழவேண்டுமே' பெனும் மனித ஆசை ஒரு பக்கமும், பசி மற்றோர் பக்கமும் போட்டியிட்டுத் தாக்குவதைத் தவிர. பாடிப்பறக்கும் குயில்! ஆடித்தாவும் மான்! — அவைகளும் வாழ்ந்துவிடுகின்றன. ஆனால், இவர்களால், வாழமுடியவில்லை — வயிற்றுப் பசியைத் தீர்த்துக்கொள்ள வழியில்லை.

உயரமான மரமொன்றில் ஏறி, உச்சிக்குப் போய்ப் பார்த்தால், ஒன்றுமில்லாததைக் கண்டு, திரும்புவோன்போல, உழைக்க நூல்கிடைத்து அதனை உருவாக்கி, மார்க்கெட்டுக்குப் போனால், அது விலை போகாததைக்கண்டு, வெந்து, மனம் நொந்து, திரும்பிய கூட்டம் இது. தவிக்கும் கண்கள்! ஊசலாடும் உள்ளம்!—பசி, காதுகளை அடைக்க, கண் மாக்கிளைகளைப் பார்க்க, உலக ஆசை ஒரு பக்கம் பிடித்திழுக்க, ஊர்வலம் வந்துகொண்டிருக்கிறார்கள். உயர்ந்த மாளிகைகள்! கூடகோபுரங்கள்! உற்சவங்கள்! ஆறுகாலப்பூஜைகள்! — அவைகளுக்குக் குறைவில்லை. கோயில்களிலே அடிக்கப்படும் மேளச் சப்தம் ஒலிக்கிறது —'ஐயர்' அடிக்கும் மணியோசையும், அனுதினமும், கேட்கத்தவறுவதில்லை. ஆனால், இவர்களோ, ஊர்வலம் வந்துகொண்டிருக்கிறார்கள்! ஊரையாளும் சர்க்கார் தலைவரோ, ஒரு நேரம் கோயில் மணிச்சப்தத்தைக் கேட்கச் சொல்லுகிறார், மற்றோர் சமயம் 'போலீஸ் லாரியை'க் காட்டுகிறார், இன்னோர் சமயம் 'என்னிடமேன் வந்தாய்?' என்று மிரட்டுகிறார். இந்த விசித்திரங்கள் தாக்கியதால், உடல் கறுத்தது போல, உள்ளமும் கறுத்து, உலவும் பிணங்களாய் ஊர்வலம் வந்துகொண்டிருக்கிறார்கள், அவர்கள்— 'சுயராஜ்ய' பாஷைப்படி சாதாரண மானவர்களல்ல, 'அவர்கள்'—இந்நாட்டின் மன்னர்கள்!

* * *

...ர்கள்! வயிற்றுப்பசி — அதனையடக்க, கால்கடுக்க நடந்து, துரைத்தனத்தாரால் விரட்டியடிக்கப்பட்டு, விரக்தியோடு உலவுகிறார்கள். இவ்வித வேதனை, ஏழைக் கைத்தறியாளரின் குடும்பங்களைத்தாக்கியதற்கு, ஒவ்வோர் சமயமும் ஒவ்வொரு 'தொல்லை' வளர்ந்தது — இன்று, அத்தொல்லைகள் யாவும் ஓரளவு நிவர்த்திக்கப் படலாம் எனக் கணக்குப்போடும் நேரத்தில், அவர்களின் ஆசைகளை யெல்லாம் அதலபாதாளத்தில் தள்ளிவிடுமளவுக்கு, அவர்களின் உற்பத்திப் பொருள் விலை போகாமல் தேங்க ஆரம்பித்துவிட்டது. நூல்தேடி, காசு தேடி, கடைசியில் பெற்று, கண்விழித்து ஆடைகளாக்கினால், அவைகளை வாங்குவோர் இல்லை! வாங்காதோர் வளர்ந்து விட்டதாலும், வாங்கும் வெளிதேசங்களில் ஆர்வம் அதிகமில்லாமையாலும், துணி தேங்க ஆரம்பித்து விட்டது. இந்தக் கேடு, சாதாரணமானதல்ல. இந்தக் கட்டம், உச்சநிலைக்குப் போய்க் கொண்டிருப்பதாலேயே, நெசவாளர்களின் பட்டினிப் பட்டாளம், நாள்தோறும் அதிகரிக்கிறது. கைத்தறித் துணி தேக்கத்துக்கு காரணம், இங்கே வாங்குவோர் இல்லை! வெளிநாட்டார் விரும்பவில்லை!!

"வெளிநாட்டார் விரும்புவாரா, மாட்டாரா? என்று ஏங்கியிருப்பதைத் தவிர அசட்டுத்தனம் வேறில்லை!" என்று, அடிக்கடி பண்டிதநேரு பேசுகிறார். அவர் வாதப்படி, பார்த்தாலோ, அனைத்தும் உள்நாட்டிலேயே, விலைபோக வேண்டும்! ஆனால், அவ்விதம், விலை போகாதபடி, 'நந்தி'யொன்று மறைக்கிறது — தடுக்கிறது. நந்தி அளவில் காட்சியளித்த, வடநாட்டு ஆலைப் பொருள்கள், இப்போது நச்சுப் பாம்பாகமாறி, உயிர்குடிக்கு மளவுக்கு வளர்ந்துவிட்டது! அந்த நச்சரவங்களோடு, நலிந்து மெலிந்த நெசவாளி, எங்ஙனம் போட்டியிடஇயலும்? இந்த நாச நர்த்தனத்தின் விளைவால், கைத்தறிச் சரக்கு உள்நாட்டில் விலைபோகவில்லை. இந்த 'இடி'யின் தாக்குதலைக் கைத்தறித் தொழிலில் ஈடுபட்டோர், அப்போதைக்கப்போது விளக்கி வந்தும், 'டில்லியின்' ஓரவஞ்சனை காரணமாக, உள்நாட்டில் 'மார்க்கெட்' பிடிக்க வசதியில்லாமற் போய்விட்டது. இந்த உண்மையை, துரைத்தன பீடம் ஏறிய அன்பர் ஆச்சாரியார் உணர்ந்ததன் விளைவாக, கைத்தறிக்குப் பாதுகாப்பு கேட்டதும், டில்லி பசப்பிப் பதில் தந்துவிட்டதையும் அறிவோம்—நாம். இந்த ஆபத்தான கட்டத்தில், நாம் செய்யக்கூடியதென்ன? — என்கிற மனிதாபிமான உணர்ச்சியின் விளைவுதான், தி. மு. கவின்—ஜன 4 கைத்தறியாளர் நாள் கொண்டாடும் திட்டம். வடநாட்டு வல்லூறு கொத்துகிறது! அதன் 'சகபாடி'யாம் இங்குள்ள துரைத்தனம் விழிக்கிறது! நெசவாளர்களோ,

(5-ம் பக்கம் பார்க்க)

## 'அன்பு' காட்டுவீர்

"செக்—புத்தகம் எங்கே? எடு! இந்தா, பத்தாயிரம்!" என்று வாரி வீசுமளவுக்கு, செல்வம் கொழிப்பதுமல்ல—சீமான்கள் நிறைந்ததுமல்ல, தி. மு. க.

ஏதாவது, பணம் தேவையென்றால் "எங்கே நாடகப்பாடம்? தடவு வேஷத்தை! வா, மேடைக்கு!!" என்று, தன்னையே நம்பி, தவழ்ந்து கொண்டிருக்கும் இயக்கமென்பதை எல்லோரும் அறிவர். எனினும், புயலால் பாதிக்கப்பட்டோருக்குத் தன்னாலான உதவிகளைச் செய்வதென, முன்வந்திருக்கிறது.

[illegible] காரணம் மக்கள்பாலுள்ள பாசம்தான் காரணம். பாச உணர்ச்சியால் வாழ்த்தி வளர்க்கும் மக்களுக்கு, அல்லலேற்பட்டபோது சும்மாயிருப்பதும், 'வேறு யாராவது செய்வார்கள்' என்று விட்டுவிடுவதும், தி. மு. க. வுக்குப் பிடிக்காத போக்கு. ஆகவேதான், தன்னை எதிர்நோக்கும் சொந்தச் சங்கடங்களை ஒரு புறம் ஒதுக்கிவிட்டு, இத்திருப்பணியிலீடுபட்டிருக்கிறது.

இந்த முயற்சியின் முதல் கட்டமாக, வரும் ஜனவரி முதலிரண்டு தேதிகளில் சென்னை மக்களின் ஒத்துழைப்பை நாடுவதென, புயல் நிவாரண நிதிக் குழுவினர் முடிவு செய்து, இரு நாடகங்களை நடத்துவதெனத் திட்டமிட்டுள்ளனர். வண்ணாரப்பேட்டை தியாகராயர் கல்லூரித் திறந்த வெளி அரங்கில், முதல்நாள் 'சந்திரோதயம்' நாடகமும், இரண்டாவது நாள் 'சந்திரமோகன்' நாடகமும் நடத்துவதென ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. பல ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் 'சந்திரோதயம்'! நிகழ்ச்சியை நடத்துவதென்பது எளிதல்லவென்றாலும், மக்களின் வேதனையைப் போக்க உதவ வேண்டுமெனும் ஆர்வம், புயல் நிவாரணக் குழுவினரை மோதிக் கொண்டிருப்பதுதான் காரணம். சென்னை மேயர் தோழர் டி. செங்கல்வராயன் தலைமையில் நடைபெறும் 'சந்திரோதயம்' நாடகத்தில், தோழர்கள்: அண்ணாதுரை, மு. கருணாநிதி, மதியழகன், நெடுஞ்செழியன், வில்லாளன், சி. வி. எம். அண்ணாமலை ஆகிய பல கழக வீரர்களும், நடிகமணிகளும் பங்கு கொள்கிறார்கள். மறுநாள் (வெள்ளி) நடைபெறவிருக்கும் 'சந்திரமோகன்' நாடகத்தில் நடிப்புப் புலவர் கே. ஆர். ராமசாமி சந்திரமோகனாகவும், 'சிவாஜி' என்று செல்லப் பெயரிட்டு அழைக்கப்படும் 'பராசக்தி' புகழ் கணேசன் சிவாஜியாகவும், மற்றும் ராஜேந்திரன் போன்ற நடிக மணிகளும், சி. என். ஏ., நெடுஞ்செழியன் முதலிய பல கழகத் தோழர்களும் பங்கேற்று நடிக்க இருக்கிறார்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழக முன்னாள் துணை வேந்தர் டாக்டர் மணவாளராமானுஜம் தலைமை வகிப்பார். இரு நாடகங்களும் தினசரி மாலை 6-30 மணிக்கு ஆரம்பமாகும். திறந்த வெளியில், மக்கள் வசதியாக, குறைந்த கட்டணத்தில் பார்க்கவேண்டுமெனும் நோக்கத்தில், ஆதரவாளர் ரூ. 5; நுழைவு டிக்கட் எல்லோருக்கும் அணா 8 என்றே, முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

நல்லதோர் காரியத்துக்காகத் துவக்கப்படும் இந்தப் பணிக்குத் தம் கையில் கிடைப்பதையெல்லாம் வழங்கவேண்டுமெனச் சென்னைத் தோழர்களைக் கேட்டுக்கொள்கிறோம். சீமான்களும், பூமான்களும் நம்மிடம் இல்லையென்றாலும், கவலை'யைப் போக்கும்மாமருந்தாக மக்கள் செல்வமிருக்கிறது என்ற துணிவே, நம்முடைய பக்கபலமாகும். அந்தப் பலத்தைக் காட்டிக் கொள்ளும் நல்லதோர் சந்தர்ப்பமாக கழகத்தோழர்கள், காட்டிக் கொள்ளவேண்டும். இரண்டு நாட்களும் திரளான மக்கள் வந்து, சீர்திருத்த நாடகங்களைக் காணவும் அதன்மூலம் புயல் நிதிக்கு உதவுமாகச் செய்யவேண்டிய கடமை, ஒவ்வொரு தோழருக்கும் இருக்கிறது.

புயலால்பாதிக்கப்பட்ட தஞ்சைக்கும் திருச்சிக்கும், விரைவில் நிதி அனுப்பித்தர வேண்டுவது அவசியம். ஆகவே, ஆங்காங்குள்ள தோழர்கள் தத்தமது சக்திக்கேற்ற அளவு, புயல் நிவாரண நிதிக்குழு செயலாளர் மு. கருணாநிதியின் முகவரிக்கு நிதி உதவி அனுப்பலாம்— தக்க சமயத்தில் செய்யும் உதவியே உதவியாகும்! வதைபடும் மக்களுக்கு உதவி செய்யும், இந்த வாய்ப்பை எல்லோரும் பயன்படுத்திக்கொள்ளவேண்டும். வெளியூர் தோழர்கள், மணியார்டர் மூலம், அனுப்பித் தரலாம்.

சென்னைத் தோழர்கள் டிசம்பர் 1, 2 தேதிகளில், தங்களது ஆர்வத்தைக் காட்டிக் கொள்ளும் அரிய வாய்ப்பு கிடைத்திருக்கிறது. கண்ணீரைத் துடைக்கும் பணி சாதாரணமானதல்ல! ஆனால் மனிதஇதயம் உண்டு என்று காட்டிக் கொள்ளவும், அன்புள்ளங் கொண்டோர் என உணர்த்தவும், கண்ணீரைத்துடைக்கும் விதமூலம்தான் உணர்த்த முடியும். அவதிப்படும் மக்கள் கூட்டத்தைக் கண்டு, கவலைப்படாத உள்ளம் படைத்தோரல்ல, தென்னாட்டவர்கள். எனினும், தொல்லைகள் பிடித்திழுக்கலாம்.— அதையும் தாங்கிக்கொண்டு இந்த 'அன்புப்பணி'க்கு, தங்களாலியன்ற ஒத்துழைப்பையும் நன்கொடையையும் வழங்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறோம். பணம் — உருண்டோடக்கூடியது! ஆனால், கண்ணீரைத்துடைக்கஅதைப்பயன்படுத்தும்போதுதான், அதற்கு மதிப்பும், கௌரவமும் ஏற்படும். எனவே, இந்த நற்பணிக்கு, ஏராளமான மக்கள் வழங்குமாறு, எல்லோரும் பணியாற்ற வேண்டும். நிதி மிகுந்தவர், கிடையாது, நம்மிடம்!—நிதி குறைந்தவர் தான், நாம் எல்லாம். எனினும், அதில் ஒரு துளியை இந்த நற்பணிக்கு ஒதுக்குங்கள்! சிறு துளி—பெரு வெள்ளம்!! —இதனை மனதிலிருத்தி, இதற்கான ஒத்துழைப்புகளை — பெருந்தொகைரூபத்தில்—காட்டக் கோருகிறோம். அன்புதான் நமக்குத்துணை!—அதனை ஆராதனை செய்யும் கட்டம் இது!! ஆகவே, தவறாதீர்!!!

✲



# கைத்தறித் துணிகளை வாங்குவீர்!

இராகம் — செஞ்சுருட்டி                    தாளம் — ஆதி

1. செந்தமிழ் நாட்டுக் கைத்தறி நெசவுச்
 சேலைகள் வேட்டிகள் வாங்குவீர்
திராவிட நாட்டினர் க்ஷேமம் வேண்டி
 சிங்கார ஆடைகள் வாங்குவீர். (செ)

2. சொந்தமிருந்த சகோதரிகாள்—அன்புத்
 தோழர்களே பெரியோர்களே
துன்பமடைந்தவர் இன்பமுறும்படி
 துணை செய்ய வேண்டும் நீங்களே. (செ)

3. அரவிண்டு காலிகோ பின்லே சென்சரி
 ஆலைத் துணிகளை எடுக்காதீர். அது
அலங்காரம் என நினைக்காதீர். முத
 லாளிகள் கொழுக்க ஏழைகளாம் தொழி
லாளர்கள் வயிற்றில் அடிக்காதீர். இனி
 அன்னிய துணிகளை உடுக்காதீர் நம்ம (செ)

4. சின்னாளப்பட்டி திண்டுக்கல்லைச்
 சேர்ந்த சித்தையங்கோட்டை
ஸ்ரீவில்லிபுத்தூர் இராமநாதபுரம்
 ஜில்லா அருப்புக்கோட்டை
சென்னை தஞ்சை காஞ்சி திருநெல்
 வேலி பாளயங்கோட்டை
தினுசுகளிருக்கு வாங்க. வாங்க
 சீர்படுத்தலாம் நாட்டை. நம்ம (செ)

5 திருப்பூரோடு ஈரோடுபவானி
 சேலம் கோயம்புத்தூர்—மற்றும்
ஜில்லாக்களிலும் நெய்தொழிலாளர்
 செய்தொழிலற்றார் கெட்டார்
தெருத் தெருவாகப் பிச்சை எடுத்தார்
 திண்டாடி இருப்பிடம் விட்டார்
சேயொரு பக்கம் தாயொரு பக்கம்
 சிரமப்பட்டார் செத்தார். காணீர் (செ)

6. வருஷம் ஒரு முறை மார்கழி மாசம்
 வைகுந்தங் காட்டும் ஏகாதசி—இப்போ
மாதம் பல முறை வைகுந்தங் காட்டும்
 ஏழைகள் வீட்டில் பசி பசி. இதில்
கருணை காட்ட நம்ம கவர்மெண்டார்க்கு
 நேரமில்லை ரொம்ப பிசி பிசி.
கைத்தறியாளர்கள் கஷ்டத்தைப் போக்கி
 கண்ணாலே பார்க்கணும் குஷி குஷி. (செ)

7. ஆறடி உயரம் ஆளுக்கேற்ற
 ஆந்திர நாட்டுப் பஞ்சு—மிக
அருமையாகவே நெய்தது அகலம்
 ஐம்பத்தாறு இஞ்சு—இதிலே
ஏர் புடிச்ச எழையுழைப்பாம்
 மூலகாரணம் பஞ்சு பருத்தி இதை
இரண்டு வருஷம் வரை இழுத்துக் கட்டலாம்
 இழை போகாது நஞ்சு—நம்ம (செ)

8. வடக்கத்திச் சேட்டாம் மார்வாடி கடையில்
 வாயில் சிலுக்கு மல்லு—பல
வர்ணத் தினுசுகள் ட்ரில்லு. அதை
 வாங்காதே விட்டுத் தள்ளு—அவன்
கடனுக்குக் கொடுத்து எழுதிடும் பில்லு
 கச்சேரி வரைக்கும் செல்லும்—தலையில்
கணக்காகப் போடுவாங் கல்லு—என்றே
 கட்டாயம் எல்லார்க்கும் சொல்லு. நம்ம (செ)

9. இரண்டு பேர்கள் இழுத்துப் போத்தின
 சரியாயிருக்கும் துப்பட்டி—பத்தி (செ)
 நல்ல
எருமைத் தோல் போல் இருக்கும் கொங்கு
 நாட்டுச் சரக்கிது கெட்டி
வறுமையினாலே வயிறு காய்ந்தவன்
 பொண்டாட்டி புள்ளே குட்டி.
மகிழ்ச்சியாகிடும் மார்க்கங் காண
 வாங்கிட ஏனோ அட்டி...நம்ம (செ)

10. ஊடைக்கும் பாவுக்கும் ஈரிழையுண்டு
 கோளத்து மூண்டு. நம்ம (கே) அது
உடம்பு தேய்க்கவும் துடைக்கவு மூதவும்
 வேண்டாம் சர்வண்டு—விலே
ஜோடியொண்ணுக்கு ரூபா ரெண்டு
 அணா பன்னிரெண்டு—ரூபா
ரெண்டும் பனிரெண்டு. எளியார்
 துயரம் நீங்கவும் தொழிலுமோங்கவும்
தயவு செய்ய வேண்டும்எல்லோரும்
 தயவு செய்ய வேண்டும். நம்ம. (செ)

11. பட்டினியோடு பட்டாளம் பட்டாளம்
 பட்டாளமாகத் தவிக்கிறார். மக்கள்
 பட்டணத் தெருக்களில் கிடக்கிறார் அவர்
கஷ்டம் தீர கவர்மெண்டாரும்
 திட்டம் போட்டும் இருக்கிறார். அது
செயல் பெறும் காலம் வருக்கிறார்.
 அது
வெட்டுங் கிணத்துத் தண்ணீர் போலே
 விளையப் போகும் தானியம் போலே
இஷ்டப்படி யுதவாதினி மேலே
 ஏழைகள் முகத்தைப் பாருங் கண்ணாலே. (செ)

ஜன 4: கைத்தறியாளர் ஆதரவு நாளுக்காக, உடுமலை நாராயணக்கவி அவர்கள் இயற்றித்தந்துள்ள பாடல், இது. கைத்தறித் துணி விற்கப் போகும் தோழர்கள் ஆங்காங்கு, பாடிக்கொண்டு விற்கலாம்.

## காணவில்லை!

## காணவில்லை!!

[புயலால் பாதிக்கப்பட்ட தஞ்சையின் கடற்கரையோரப் பிரதேசங்களைப் பார்வையிடவும், இந்த சட்டசபை உறுப்பினர்கள் வரவில்லையாம். இவர்கள் யாவரும் காங்கிரஸ்காரர்கள். இந்த வேதனையைவிளக்கி, அதிராம்பட்டினம் பேராவூரணி — சேதுபாவாசத்திரம் தொகுதி வாக்காளர்கள் வெளியிட்டுள்ள, அண்டு அறிக்கை இது.]

1. R வெங்கட்ராமன்,
 வயது சுமார் 40, B. A. B. L. பாராளுமன்ற அங்கத்தினர், உயரம் சுமார் 5 அடி 5 அங்குலம், சிவப்பு நிறம், கிராப்புத்தலை. நல்ல பேச்சாளர், ஊர்; பட்டுக்கோட்டை.

2. S. வெங்கட்ராமய்யர்,
 வக்கீல், வயது சுமார் 55 உயரம் சுமார் 5½ அடி, மெல்லிய உடம்பு, சென்னை சட்டசபை அங்கத்தினர், வழுக்கைத்தலை தந்திரமான பேச்சாளர், சிவப்பு நிறம், ஊர்; பட்டுக்கோட்டை.

3. V. நாடிமுத்துப்பிள்ளை
 வயது சுமார் 55, உயரம்சுமார் 6 அடி, கருப்பு நிறம், கிராப்புத்தலை, கம்பீரமான பேச்சாளர், தஞ்சை ஜில்லா போர்டு தலைவர், சென்னை சட்டசபை அங்கத்தினர், ஊர்: பட்டுக்கோட்டை.

4. B. சோமசுந்தரம்சேர்வை,
 வயது சுமார் 30, சிவப்புநிறம், உயரம் சுமார் 6½ அடி, ஒல்லியான உடம்பு, பிரபல மிராசுதார், கிராப்புத்தலை, தஞ்சை ஜில்லாபோர்டு அங்கத்தினர், ஊர்: காம்பக்காடு.

இவர்கள் எங்கள் பிரதிநிதிகள்.

இவர்களுக்கு ஓட்டு போட்டு பாராளும் மன்றத்திற்கும், சென்னை சட்டசபைக்கும், 'ஜில்லா போர்டுக்கும் எங்கள் குறைகளைத் தவிர்ப்பார்கள் என்று அனுப்பிவைத்தோம். இவர்கள் எங்களிடம் ஓட்டு கேட்கும்போது, நெருப்பில்லாமல் சோறு சமைப்போம், பருப்பில்லாமல் சாம்பார் வைப்போம் என்றெல்லாம் தேனொழுகப் பேசி, வீடு வீடாக நுழைந்து ஓட்வாங்கிச் சென்றார்கள்.

ஆனால் கடந்த 14—11—52ல் அடித்த புயல் காற்றினால் இப்பகுதியில் பல லட்சக்கணக்கான பெறுமதியுடைய சொத்துச் சுகங்களும், கால்நடைகளும் வீடுவாசலுமிழந்து நாதியற்றவர்களாகி தவித்துக் கொண்டிருக்கும் இந்நேரத்திலும் மேற்கண்ட எங்கள் தலைவர்களைக் காணவில்லையே!

ஒருக்கால் காற்றினால் கவிழ்ந்து விட்டனரோ, மழையினால் மடிந்து விட்டனரோ, சுவரிடிந்து சுவர்க்கம் புகுந்தனரோ,? ஒன்றும் புரியவில்லை.

யாரேனும் அவர்களைக் கண்டால் தயவு செய்து தகவல் கொடுக்கும்படி வணக்கத்துடன் கேட்டுக்கொள்கிறோம்.

★

## பாண்டியன் படுகொலை

கண்டன ஊர்வலம்: 7—12—52 ஞாயிறு மாலை 3 மணிக்கு சென்னை சிந்தாதிரிப்பேட்டை நேப்பியர் பார்க்கிலிருந்து சென்னை மாவட்ட திராவிட முன்னேற்றக்கழக துணைச் செயலாளர் க. சிதம்பரம் தலைமையில் மாபெரும் கண்டன ஊர்வலம் நடைபெற்றது. மவுண்ட்ரோடு வழியாக சைனாபஜாரைக் கடந்து பல முக்கிய வீதிகளின் வழியாகச் சென்று மாலை 7 மணிக்கு வண்ணை—கல்லறையில் முடிவுற்றது. பெருமழை பெய்ததையும் பொருட்படுத்தாது "நல்லதீர்ப்பு தேவை" என்று முழக்கமிட்டுக் கொண்டு பெருவாரியான மக்கள் சென்றனர். மாவட்டச் செயலாளர் கே. எம். கண்ணபிரானும், மற்ற கிளைக் கழகங்களின் செயலாளர்களும் ஊர்வலத்தை உடனிருந்து நடத்தி வைத்தனர்.

*

கீழ்க்கண்ட இடங்களில் 'நல்ல தீர்ப்பு தேவை' என்று கோரி தீர்மானங்கள் நிறைவேறப்பட்டிருக்கின்றன:—

சென்னை—23-வது வட்டம் தி.மு.க.
இந்திய கம்யூனிஸ்டுகட்சி (பொன்மலை)
சூலூர் தி. மு. க.
முக்கூடல் (நெல்லை)
அத்திப்பாளையம் (கோவை)
கடம்பூர்
தாத்தையங்கார் பேட்டை
குள்ளம் பட்டி (சேலம்)
பீமநகர் (திருச்சி)
நெல்லை
சேலம் மாவட்ட தி. மு. க.
மலைக்கோட்டை
தேவாரம்
ஆனைமலை
கம்பம்
கொடைக்கானல்
தென்காசி
சென்னை—39-வது கிளை
சென்னை—சிந்தாதிரிப்பேட்டை

★

கர்ம வீரன்

# கரிபால்டி

சமூக சீர்திருத்தத்திலும், அரசியல் ஆட்சியிலும், நூலாராய்ச்சியிலும், வாலிப வீரர்கள் தலைசிறந்து நின்று உலகத்தை முன்னேற்றமுறச் செய்துள்ளார்கள். கலங்கா வீரன் கரிபால்டியின் வரலாறு வாலிபர்களுக்கு எழுச்சியைத் தருமாகையால் அவன் வரலாறு இங்கு தரப்படுகிறது.

கரிபால்டி இளைஞனாயிருக்கும்போது ரோம் நகரைப்பற்றி எண்ணற்ற நூல்களைப் படித்திருந்தான். தம் நாட்டைப்பற்றிய இச்செய்திகள் யாவையும் அறிந்தவுடன் அவனுக்குள் உவகையும் இன்பமும் துன்பும் கலந்த வியப்பு உண்டாயிற்று. கரிபால்டியின் கண்களில் நீர் ததும்பிற்று. ஏன்? ரோம் நகரம் பாழ்பட்டு அடிமையுற்றுக் கிடப்பதை எண்ணியேயாம். கரிபால்டியின் கண்களில் இரண்டுவகையான காட்சிகள் தோன்றின ஒன்று ரோம் நகரத்தில் முற்காலத்திலுள்ள வீரர்களும் அறிவாளிகளும் நிறைந்த காட்சி; மற்றொன்று இக்காலத்தில் அடிமையில் அகப்பட்டு அறிவின்றி மக்கள் நடைப்பிணங்களாயலையும் காட்சி. கரிபால்டி எண்ணலானான். ரோமாபுரியின் தாய்நாடான இத்தாலியில் என்னுடைய உடன்பிறப்பாளர்களாகிய மக்கட்குச் சுதந்திரமில்லையே! என் மக்கள் பிற தேயத்தவரான பிரெஞ்சுக்காரர்களின் காலின்கீழ் அகப்பட்டுத் துன்புறுகின்றார்களே; எம் மக்கள் கண்ணீரும் கம்பலையுமாய்க் கதறுகின்றார்களே! நம் நாட்டிலேயே, நம் நாட்டவர்க்குப் பிற நாட்டினரால் இத்தகைய இழிவு விளைவதைக் கண்டும் நான் ஏன் வீணே இருக்க வேண்டும். என் நாட்டிற்காக என் நாட்டு மக்களின் அடிமைத் தளைகளை உடைப்பதற்காக நான் போரிடுவேனென முடிவுசெய்தான். சின்னாபின்னமாகச் சிதறுண்டு கிடந்த இத்தாலி நாட்டை ஓரேநாடாகச் செய்து அதனைப் பிற அரசர்களினின்றும், பிறர் விளைவித்த அடிமைத் தளையினின்றும் விடுவிப்பேன் எனும் வீரஉறுதிகொண்டான். புரட்சி எண்ணங்களை உள்ளடக்கிய இக் கரிபால்டி முதன் முதல் மாலுமித் தொழிலில் பாய்மரக்கப்பலில் பணியிலமர்ந்தான். பல தேயங்களைச் சுற்றுவதற்குரிய வசதியையும் அனுபவத்தையும் கொண்டு எப்படியாவது இத்தாலியை விடுதலையடையச் செய்து சுதந்திர நாடாகக் காண்பேன் என எண்ணினான். இவ்விருப்பு எண்ணம் அவனை இராப்பகலாய்த் துன்புறுத்துவதாயிற்று. 26-ம் வயதில் கடற்கரையிலிறங்கித் தண்ணீரருந்தச் சென்றபோது அங்குள்ளோர் மாசினியைப் புகழ்ந்துபேசினார்கள். இத்தாலி ஏழைகளின் அடிமைக் கட்டுகளை அவிழ்க்க வந்த பெருமகனான கரிபால்டிக்கு மாசினியைக் காணவேண்டுமென்ற ஆசை எழுந்தது, அங்ஙனமே மாசினியைக் கண்டான் மார்சேல்சில். கண்டதும் புதிய உலகமான அமெரிக்காவைக் கண்டு பிடித்த கொலம்பஸ் அக்கண்டத்தைக்கண்டபொழுதுகண்டஉவகையினும் பேருவகை எய்தினேன் எனக்கூறினான். இவ்விருவரும் அயல் நாட்டினரைத் தம் நாட்டினின்றும் ஓட்டுதற்குரிய வழி தேடினர். "இத்தாலிய இளைஞர் கழகம்" மாசினியால் முன்னரேயே நாட்டப்பெற்றிருந்தது. கரிபால்டி அக்கழக உறுப்பினனானான். இவன் உறுப்பினனான நாள் தொட்டு மிகப் பெரிய கிளர்ச்சியை அக்கழகத்தின் சார்பில் ஏற்படுத்தியது மல்லாமல் ஒரு சிற்றரசனின் கப்பற்படை (சார்டீனியாவி)யில் வேலையிலமர்ந்து பிறநாட்டினர்களிடமுள்ள இத்தாலியத் துறைமுகங்களை கைப்பற்றவும் முயற்சித்தான். இம்முயற்சியை அறிந்த ஆஸ்திரிய சர்க்கார் மிகுதியும் வெகுளிகொண்டனர். அவர்கள் கரிபால்டிக்குத் தூக்குத் தண்டனை விதித்தனர். அத்தண்டனை தோல்வியுறும்படி செய்யப்பட்டது, ஒருநாள் இத்தாலிய இளைஞர் கழகம் மிக ஊக்கமாக நடைபொற்றபோது அரசியலாரின் சேவகர்கள் தலையிட்டுக் கரிபால்டியைக் கைது செய்ய முயற்சித்தனர். அன்று அவன் கிடைத்திருந்தானானால் அவனைத் துண்டாக வெட்டி எறிந்திருப்பார்கள். கரிபால்டி உளத்திண்மையுடன் தப்பி ஓடிவிட்டான். பல நாள் உணவின்றித் தலைமறைவாகக்காடு செடிகளிலெல்லாம் சுற்றித்திரிந்தான். ஒருநாள் வெறும் எலும்புக் கூட்டோடு தன்தாயும் ஐயமுறும் வகையில் வீட்டுக்குள் நுழைந்தான். தாய், தன் மகனைக் கண்டு கண்ணீர் உகுத்தாள் "அம்மா! அழாதே!! எவ்வேலையின் பொருட்டுப் பிறந்தேனோ அவ்வேலையைச் செய்கின்றேன். நீ இது குறித்து அழுவதால் பயன் என்ன? மேலும் அழுதாயானால், அரசியல் சேவகர்கள் வந்துவிடுவார்கள். என்னைப் பிடித்துப் போய்விடுவார்கள்" என்றான். கரிபால்டி தன் நாட்டினின்றும் நீங்கி அமெரிக்கா சென்று தங்கியிருந்தான். அமெரிக்காவில் சிறு சமஸ்தானங்கள் தம்முடைய உரிமைக்காகப் போராடின. அச்சமஸ்தானப் போராட்டத்தில் கரிபால்டியும் கலந்துநின்று பணி புரிந்தான். ஒரு கப்பற் படைக்குத் தலைமை தாங்கி எதிரிகள் கண்டு நடுங்கும்படி போர்புரிந்தான். எந்நாட்டவராயினும், மக்களை மக்கள் அடிமைப்படுத்தி ஆட்சி புரிவதை அவன் பொறுக்கமாட்டான். இவன் இங்ஙனமிருப்பினும் தன் தாய்நாட்டின் விடுதலையிலேயே இவன் உளம் ஊன்றிக்கிடந்தது. ஆஸ்திரிய சர்க்கார், இத்தாலியருக்குக் கடுந் துன்பம் இழைத்து வருவதைக் கேள்வியுற்று இவன் உளம் துடிக்கத் தொடங்கியது. கொடுமை தாங்க முடியா இத்தாலியர், பொறுமை இழந்து துடிக்கின்றனர் என்ற செய்தி இவனுக்கு எட்டியது. இச்செய்தி கரிபால்டிக்கு ஒரு பெரிய நிதி கிடைத்ததுபோல் இருந்தது. உடனே புறப்பட்டு இத்தாலிக்குச் சென்று ஒரு பெரிய தொண்டர் படை திரட்டினான். கரிபால்டியைப் பார்த்தாலே தொண்டர்களுக்கு எழுச்சி உண்டாகும். நாட்டிலுள்ள வாலிபர்களெல்லாம் அவன் திரட்டிய தொண்டர்படையில் சேர்ந்தனர். உரிமைவேட்கை மேலீட்டால் யுத்தத்தில் வீரமுடன் இறங்கிப் போர் புரிந்தனராயினும் அப்போரில் முதலில் இத்தாலியர் வெற்றியெய்தினர். பிரெஞ்சுக்காரர்களின் உதவியைப் பெற்றுச் சண்டையிடும் ஆதிக்கக்காரரை வெல்ல முடியவில்லை. அப்பொழுது கரிபால்டி தோல்வியும் வெற்றியே— என்று ஊக்கினான். முடிவில் இத்தாலியர் வெற்றி பெற்றனர். ஆயினும் மறுமுறை எதிரிகள் பெருஞ்சேனைகளுடன்வந்துகரிபால்டியைத் தாக்கித் தோல்வியுறச் செய்தனர். ஒருமுறை கரிபால்டி, சோர்ந்து ஓடிப்போக நேர்ந்த சமயத்துத் தொண்டர்படையை நோக்கிக் கூறுவான்; "ஏ, வீரருக்குள் வீரர்களே என்னைப் பின்பற்றி வருவோர், வயிற்றுக்கு இல்லாது உழைக்க வேண்டும். மழை, காற்று, வெயில் என்று பாராமல் அலைந்து திரிய வேண்டும். தூக்கத்திற்கு நேரமில்லை. யுத்தம் செய்யவேண்டி வந்தால் உங்களுக்கு ஆயுதமில்லை. வாளைக்கையிலேந்திக்கழுத்தை இலக்காகக் கொண்டுவரும் எதிரிகளுடன் வெறும் கைதூக்கிப் போரிடல் வேண்டும். நாட்டுப் பற்றுடைய நாட்டு மக்களுக்கு நன்மை செய்பவர்கள் என்னுடன் வாருங்கள்; நாடு நம்முடையதே" இங்ஙனம் கூறிய அவன் வீரவுரையைக்கேட்டவருள் 3000 பேர் அவனைப் பின்பற்றினர். இவர்களைக் கூட்டி முழக்கிக்கொண்டு கரிபால்டி, போரிட்டான். அரசாங்கச்சேனைகள் ஓடின. அவர்கட்கு அகப்படாமல் காடு செடிகளுட்புகுந்து கரிபால்டி சான் மரீனோ, என்னும் சுதந்திரநாட்டை அடைந்தான். அங்கிருந்தும்போக சர்க்கார் அந்த நாட்டிற்கு மடல் எழுத, கரிபால்டி அவ்விடம் விட்டு ஓட ஆரம்பித்தான்.

ஓடும்பொழுது அவன் மனைவி பலநாள் உணவு, உறக்கம் ஓய்வு இல்லாமல் அவனுடன் அலைந்ததால் வனத்தினிடையில் இறந்தாள். தானே குழிதோண்டித் தன் மனைவியைப் புதைத்தான் தாங்கமுடியாத துக்கத்தை விழுங்கிக்கொண்டு பின்னும் ஓடினான். இடையில் எதிரியின் சேனைகளின் கையில் அகப்பட்டானாயினும், உருக்குலைந்து நரம்பும் தோலுமாய் இவனிருந்தானாகையால் இவனை ஐயுறாமல் விட்டுவிட்டனர். மீண்டும் அமெரிக்கா சென்று சில ஆண்டு தங்கித் திரும்பவும் இத்தாலி வந்து 1859ல் தனது 52 வயதில் மற்றொரு தொண்டர் படையைத் திரட்டினான். சுதந்திரப்போரில் வயதானாலும் ஊக்கம் குறையாமல் போர் புரிந்தான். இத்தடவையில் கரிபால்டி போரில் வெற்றி பெற்றான். வெற்றிபெற்று அந்நாட்டு மக்களின் அடிமைத்தளையை நசுக்கி எறிந்தான். கரிபால்டியின் வெற்றியின் எதிரொலியாக எங்கும் விடுதலை என்ற ஒலியே முழங்கிற்று. கரிபால்டியின் வாழ்க்கை மிக எளிய வாழ்க்கையேயாம். தன் கையில் பொருள் கிடைத்தால் அதனை ஏழைகளுக்குக்கொடுத்துவிடுவான். இவ்வளவு துன்புறுத்திய சர்க்காருடைய ஏழை குடிகளுக்குக்கூட கரிபால்டி தனக்குக் கிடைத்த பொருளைத் தானமாகக் கொடுத்தான். இவன் இறக்கும்பொழுது வயது 75. ஓயாது உழைத்த இவ்வுரவோன் இங்கிலாந்திற்கு ஒரு தடவை சென்றபோது நல்ல மரியாதையாக வரவேற்று விருந்தளித்து வாழ்த்தினர். எந்நாட்டு மக்கள் உள்ளத்திலும் இன்று கரிபால்டி நின்று நிலவுகின்றான்.

★

## நீத்தார் நினைவுநாள்

தஞ்சை மாவட்ட தி. மு. க. மாணவர் சொற்பயிற்சி வகுப்புக்கு இடமளித்துபயிற்சிவகுப்புச்சிறந்த முறையில் நடைபெற உதவிய தேப்பெருமாநல்லூர் தோழர் எஸ். சண்முகவேலு சகோதரர்களின் தாயார் வெள்ளையம்மாள் அவர்கள் 3—12—52ல் இயற்கை எய்தியதை முன்னிட்டு அன்னாரின் நினைவுநாள் 15—12—52ல் நடைபெற்றது. கூட்டத்துக்கு தோழர் கே. கே. நீலமேகம் அவர்கள் தலைமை வகித்து இறந்த வெள்ளையம்மாள் அவர்களின் சிறந்த குணங்களைப்பற்றியும், தோழர் சண்முகவேலு சகோதரர்களுக்கும் அன்னார் குடும்பத்தினருக்கும் அனுதாபம் தெரிவித்தும் சொற்பொழிவாற்றினர்.

## பாராட்டு

காஞ்சி நகரசபையின் துணைத் தலைவராக நகர சீர்திருத்தக் கழகத்தைச் சேர்ந்த தோழர் பொன்னுச்சாமி அவர்கள், காங்கிரஸ்அபேட்சகரை எதிர்த்து நின்று வெற்றி பெற்றதையொட்டி, 19—12—52 அன்று சின்னகாஞ்சிபுரம் அர்பன் பாங்கில் ஒரு பாராட்டுத் தேனீர் விருந்து நடைபெற்றது.

# ஜனவரி 4

ஜனவரி 4-ல் கைத்தறித் துணிகளை விற்பனை செய்யும் தோழர்களுக்கு:—

1. காலை முதல் மாலைவரையில் வீதிகளில் விற்பனை செய்யவும்
2. மாலையில் பொதுக் கூட்டம் நடத்துவது நல்லது
3. சிறிய கைவண்டியில், கைத்தறித் துணிகளை(பலகையில்) வைத்துக்கொண்டு, வீதிகளில் தள்ளிக் கொண்டு, செல்வது, பலனுள்ளதாகும்.
4. இயக்கத் தோழர், தலைமை நிலையம் அனுப்பும் பாடலை, வீதிகளில் பாடிச் செல்ல வேண்டும்.
5. கைத்தறித் துணிகளை ஆதரிக்கும்படி வேண்டுகோள் விடுக்கும் முறையிலும் கைத்தறியாளர் கஷ்டத்தை விளக்கும் வகையிலும் முழக்கமிட்டுச் செல்ல வேண்டும். ஆட்சியாளரைக்கண்டிக்கும் ஒலியோ, பிற எந்த இலட்சிய ஒலிகளோ அன்று தேவை இல்லை.
6. கைத்தறித் துணிகளை,
   (அ) தனிப்பட்ட நெசவாளர்களிடமிருந்து
   (ஆ) கூட்டுறவுச் சங்கங்களிடமிருந்து
   (இ) தனிப்பட்ட வியாபாரிகளிடமிருந்து
   பெற்றுக் கொள்வதோடு, விற்பனையானது போக மீதியிருப்பதை திருப்பி அவர்கள் பெற்றுக் கொள்வது என்ற நிபந்தனையுடனும், முன்பணம் கட்டத் தேவையில்லை என்ற நிபந்தனையுடனும் பெற்றுக் கொள்ளலாம். அ, ஆ, இ, என்ற பிரிவுகளை அந்தந்த ஊரின் நிலைமைக்கு ஏற்ற வகையில், தெரிந்தெடுத்துக் கொள்ளலாம்.
7. உள்ளூர் கிளைகழகத்தினர், விற்பனை செய்யவருபவருடன் இருந்து ஏற்பாடுகளைக்கவனித்துக்கொள்ள வேண்டும்.
8. அந்தந்த ஊரில், முக்கியமான இல்லங்களை கிளைக் கழகத்தார் குறித்துத் தந்து, விற்பனை செய்ய வரும் தோழர்கள் மூலம், வீடு சென்று கைத்தறி ஆடைகளை விற்க வேண்டும்.
9. அன்று விற்பனை நிகழ்ச்சியில் கலந்து கொள்பவர்கள் எல்லாம், கைத்தறி ஆடைகளையே உடுத்திக் கொண்டிருக்க வேண்டும்
10. விற்பனையின் போது, ஜாதி, மத, கட்சிப் பாகுபாடுகளை ஒதுக்கிவிட்டு, அனைவரையும் அணுகி வேண்டிக் கொள்ள வேண்டும்.
11. வீதிகளில் விற்பனை நடத்தும் போது, போக்குவரத்துக்கு இடையூறு ஏற்படா வண்ணம், ஒழுங்கை நிலை நாட்ட வேண்டும்.

அண்ணாதுரை

தஞ்சைப் பொதுக் குழுவில் கலந்துக் கொண்ட கோவை மாவட்டப் பிரதிநிதிகள்:

சி. எஸ். சின்னதுரை
ஜி. என். ராஜு
பெத்தாம்பாளையம்—பழனிச்சாமி
பி. எம். பொன்னுசாமி
ஈ. வெ. கி. சம்பத்
எஸ். ஆர். சந்தானம்
எஸ். ஏ. ராசமாணிக்கம்
எஸ். அப்பாவு
வி. சண்முகநாதன்

✲



# ஜன. 4 :: கைத்தறியாளர் ஆதரவு நாள்

## "நாடெங்கும்—வீதிகளில் விற்பனை செய்வோம்"

## "நெசவாளர் வாழ்வுக்காக உதவுவோம்"

திராவிட முன்னேற்றக் கழக, தஞ்சை பொதுக்குழு தீர்மானப்படி, ஜனவரி 4-ந் தேதியன்று, தி. மு. க. முன்னணி வீரர்கள், வீதிகளில், கைத்தறித் துணிகளைவிற்பனைசெய்வார்கள். நாலாஇடங்களிலும், மேற்படிநாளைக் கொண்டாட ஏற்பாடுகள் நடப்பதாக செய்திகள் குவிகின்றன. நல்லதோர் பணி, இது கட்சி பேதமற்ற, மனிதாபிமானச் செயல்.

அன்று, விற்பனையிலீடுபடும், தி. மு. க. முன்னணி வீரர்களின் பட்டியல்:—(பொதுக் குழு முடிவுப்படி)

**திருச்சி:**
அண்ணாதுரை
அ. பொன்னம்பலனார்
வில்லாளன்
இசைமுரசு ஹனீபா
எம். எஸ். மணி
பராங்குசம்

**சென்னை:**
மு. கருணாநிதி
கே. எம். கண்ணபிரான்
கே. ஆர். செல்லமுத்து

**சைதாப்பேட்டை:**
சி. வி. ராஜன்

**காஞ்சி:**
கே. ஆர். ராமசாமி
சி. டி. டி. அரசு
ஈழத்தடிகள்
சி. வி. எம். அண்ணாமலை
செ. கோ. பெருமாள்
டி. சபாபதி

**வேலூர்:**
காஞ்சி. மணிமொழியார்
ஏ. எல். சி. கிருஷ்ணசாமி
டி. வி. நாராயணசாமி
டி. சி. தங்கவேலு

**சிதம்பரம்:**
அரங்கண்ணல்
கே. டி. எஸ். மணி
பாலகுருசாமி

**சேலம்:**
கே. ஏ. மதியழகன்
ப. கண்ணன்
ஜி. பி. சோமசுந்தரம்
ஜி. என். ராஜு
கே. ஏ. நடராசன்

**ஈரோடு:**
சத்தியவாணிமுத்து
அழகமுத்து

**கோவை:**
ஈ. வி. கே. சம்பத்
எஸ். அப்பாவு

**தஞ்சை:**
கே. கே. நீலமேகம்
டி. கே. சீனுவாசன்
ஏ. வி. பதி
எஸ். கே. சாமி
எம். எம். நடராசன்

**மதுரை:**
சி. பி. சிற்றரசு
ராஜமான்
பால்ராசு

**ராமநாதபுரம்:**
சௌந்திரபாண்டியன்

**நெல்விருப்பம்**
இரெ. இளம்வழுதி

**திருமங்கலம்:**
இரா. சு. தங்கப்பழம்
கு. ப. ம. தர்மன்

**நாகர்கோயில்:**
என். எஸ். இளங்கோ

**காரைக்குடி**
இரா. நெடுஞ்செழியன்
கண்ணதாசன்
இராம. சுப்பையா
வெள்ளையன்.

**விருதுநகர்**
ஏ. கே. வேலன்.

**ஸ்ரீவில்லிபுத்தூர்**
எப். எஸ். ராமசாமி.

**அருப்புக்கோட்டை**
ஏ. வி. பி. ஆசைத்தம்பி.

**அம்பாசமுத்திரம்**
வீரபாகு.

**தூத்துக்குடி**
என். வி. நடராசன்
கி. மனோகரன்.

**மாணவ மணிகளே! தொழிலாளத் தோழர்களே!!**
**தாய்மார்களே! நாட்டின் நலம் விரும்பிகளே!!**

**★ ஜன. 4ல் உங்கள் ஆதரவை உணர்த்துவீர் ★**

2-ம் பக்கத் தொடர்ச்சி

நெஞ்சு கொதிக்கும் கதைகளோடு வீதிகளில் அலைகிறார்கள்! இந்த விசித்திரமான நேரத்தில் அரசியல் ஆதிக்கக்காரர்களின் சபடத்தை வெளியுலகுக்கு உணர்த்திக் காட்டும் அரும்பணியோடு, நெசவாளர்களுக்கான நேரடி ஒத்துழைப்பையும் நல்லாதரவையும் காட்ட முன்வந்திருக்கிறது—தி. மு. க. அதன் விளைவுதான், ஜன 4.

தேங்கிக்கிடக்கும் கைத்தறி ஜவுளி, விற்றால்தான் நெசவாளர் வாழ்வு ஓரளவு நிமிரமுடியும். அதனை விற்பது என்றால், மில்துணியோடு போட்டிபோட முடியாது! ஆகவே, கைத்தறித்துணி வாங்குமாறு நமது மக்களிடையே நாம் ஓர் விழிப்புணர்ச்சியை உண்டாக்க வேண்டும். வேதனைப்படும் நெசவாளர்களின் உண்மை நிலையுணரும் எவரும், ஆலையூரின் சரக்கினை ஆதரிக்க முன்வரார். அத்தகைய பிரச்சாரம், மக்கள் மன்றத்தில் செய்யப்படவேண்டும்! 'கடாவ்' வாயில் வேண்டுமா, 'ஆலிந்த் ஷர்டின் அழகினைப்பாரீர்!' என்று, மனமயக்கும் விளம்பரங்களால், 'ஆலையூர்', பவனிவருகிறது, இங்கு. அத்தகைய 'பணப்பிரச்சாரத்தை', மக்களின் குரலால் ஒடித்து வீழ்த்தி, உலரும் நெசவாளரின் உயிர்காக்கும் திருப்பணியென நாட்டோரின் கவனத்தைக் கைத்தறியின் பக்கம் திருப்பிடவேண்டும், என்கிற போரவலின் விளைவுதான்—ஜன 4.

ஜன. 4 — மனிதாபிமானத்தின் விளைவாக மலர்ந்தது.

தாயகப் பொருளுக்கு தனி மதிப்பு உண்டாக்கவேண்டும் என்ற நோக்குடன் கொண்டாடப்படுவது.

அதனால்தான், 'மேற்படி நாளில் எவ்வித அரசியல் முழக்கங்களும், விற்கச் செல்வோரால் எழுப்பக் கூடாது' என்று, தெரிவிக்கிறது.

மக்கள் மன்றத்தின் கவனம், கைத்தறியின் பக்கம் திருப்பப்பட வேண்டும் என்பதற்காகத்தான், தி. மு. க.வின் முக்கியப் பிரச்சாரகர்கள் யாவரும், இந்த நாளில் நேரடியாகப் பங்கெடுத்துக்கொள்கிறார்கள்.

இந்த நல்லெண்ணத்தை — அரசியல் 'விஷத்தை' வீசி, மாற்றுக் கட்சியினர் பாழ்படுத்தமாட்டார்களென நம்புவதோடு, அவர்கள் எல்லோரது ஒத்துழைப்பையும் எதிர்பார்க்கிறோம்.

தி. மு. க. தீர்மானம் நிறைவேற்றிய பிறகு, தேசிய இதழ்கள் பலவும் 'கைத்தறி வாங்கவேண்டியதன் அவசியம்' குறித்து, எழுதியிருக்கின்றன. அன்பர் ஆச்சாரியார் அவர்களும், ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார். அவைகளில், தி. மு. க.வின் திருப்பணி குறித்து ஒரு சிறு சொல்கூட, இல்லை—எனினும் பரவாயில்லை. இந்த அளவுக்கு அவர்கள் முன்வந்து, தலையங்கமும் அறிக்கையும் வெளியிட்டு ஆதரவு தந்தமைக்காக நன்றி செலுத்திக் கொள்கிறோம்.

ஜனவரி 4—உலர்ந்தோர் வாழ்வு துளைக்கும் நாள்.

தி. மு. க. வீரர்கள், ஒரு நற்பணியில் ஈடுபடும் நாள்.

இந்த நாளில், மாற்றுக்கட்சியினர் அனைவரும், மனமொத்து கைத்தறியாளருக்கான ஆதரவுகளைத் தரவேண்டுமென விரும்புகிறோம்.

இதனை, ஓர் அரசியல் வலையாக்க—தி. மு. க. விரும்பாது.

மனிதாபிமானத்தின் விளைவே, இந்த நாள்.

ஆகவே, கைத்தறியாளராம் நமது உடன்பிறப்பாளர்களை உய்யச்செய்யும் மேலான பணியில், அனைவரும் ஈடுபடுதல் வேண்டும்.

ஜன. 4ன்—முக்கியத்துவத்தை, காட்டு மக்களின் வாழ்க்கையில் பற்றும் பாசமும் கொண்ட தி. மு. க. கிளைகள் நன்கு உணரும்.

அவைகள், இந்த நாளை தமது கழக வரலாற்றில் குறிப்பிடத்தகுந்த நாளாகக் கருதி, ஆங்காங்கும் கைத்தறிக்கான ஆதரவைத் தேடித் தரும் முயற்சிகளைச் செய்ய வேண்டும்.

வெண்புறு, மீட்கப்படவேண்டும்—வல்லூறின் பிடியிலிருந்து.

வட்டமிடும் வல்லூறை விரட்டுமுன், வெண்புறுவைக் காக்கவேண்டும்.

நமது ஆதரவு, வெண்புறுவுக்கு உண்டென்றால், வல்லூறு அஞ்சும்! அந்த அச்சத்தை வடநாட்டு மில்லதிபர்களுக்கு உண்டாக்கும் நாளாக, ஜன. 4—திகழவேண்டும். ஆலையூர் அஞ்சவேண்டும்! அந்தளவுக்கு ஆதரவு திரளவேண்டும்!!—இந்த நன்னோக்கம் கொண்டது தான், ஜன-4.

மாற்றானின் வலிமையை எதிர்த்து வீழ்த்த நம்மால் இயலாது. ஆனால், எதிர்க்கச் சக்தியற்றுச் சாகும் 'கைத்தறி'க்கு உயிரூட்ட, நம்மால் இயலும். ஆதிக்க அரசை, எளிதில் வீழ்த்தமுடியாது—அந்த அளவுக்கு வளர்ந்து கிடக்கிறது, அது ஆனால், அதற்குப் போகும் நமது 'பணத் தோட்டாக்களை' களையும் நம்மவருக்குத் தந்துதவமுடியும்.

எதிரியின் பணபலத்துக்கு, இன்னும் பலம் சேர்த்துக் கொடுப்பது, தன் கண்ணைத் தானே குத்திக் கொள்வதை ஒக்கும். தமிழகத்தின் மண் சுடுகாடாகிறது! அதனைக் கண்டும் பரிதாபப்படவில்லை, ஆலையூர்!! அதனை, மனதிலே கொள்ளவேண்டுகிறோம். ஒருமுறை, விழிகளில் நீரோடு உலவும் தறியாளரை நினையுங்கள். அவர்கள் வாழ்வு செப்பனிடப்பட, நாம் ஏதாவது செய்ய வேண்டாமா? அவர்கள், நமது நாட்டின் அங்கங்கள். அங்கம் பங்கப்படுகிறது! அதன் துயர் துடைக்காவிடில், உடல் நீடிக்காது! ஒரு நாள், நமக்கும் அதே கதிதான்!!

இதனை உணரவேண்டுகிறோம், எல்லோரும். நம் கைகளை நாம் தான் பலப்படுத்தவேண்டும்-நமது குடும்பத்தவரை நாம்தான் காப்பாற்றவேண்டும். இதனை மக்கள் மனதில் பதிய வைக்கும் நாளாக, ஜனவரி 4—கொண்டாடப் படவேண்டும்.

ஜனவரி 4—ஒரு வரலாற்று நாள். தாழ்ந்தோரின் வாழ்வில், புது உணர்ச்சி பூக்கச் செய்யும் நாள். தவிப்போரின் கண்ணீர் துடைக்கும் நாள். மனிதாபிமானத்தை வளர்க்கச் செய்யும், நாள். எதிரியை மோத, தன்னைப் பலப்படுத்திக் கொள்ளும் நாள். 'ஏழைதான்—ஆனால் கோழையல்ல' என்று உலகுக்கு அறிவிக்கும் நாள். இந்த நாளில், ஒவ்வொரும் தத்தமது 'உதவி'யைச் செய்ய வேண்டுகிறோம். "தமிழகம், தாழ்ந்தது உண்மை! ஆனால் அதன் மைந்தர்களின் உள்ளம் தாழ்ந்துவிடவில்லை! உயரிய பண்பு ஒளிவிடுகிறது—உதிரம் சிந்தும் சகோதரனைச் சாகச் செய்யவிடவில்லை—உயிர் கொடுத்து விட்டார்கள்! அத்தகைய உத்தமர்கள் உலவுகிறார்கள்!" என்று உலகம், வியந்து பாராட்டவேண்டும், நம்மை.

தென்னாட்டோரே! நீரமிக்க வழி சத்தவரே! மாற்றுக் கட்சிச் சகோதரர்களே! மாணவ மணிகளே! உலகப் புகழின் ஒளிவிளக்குபோல நம்மை நாம் காட்டிக் கொள்ளும், சந்தர்ப்பத்தை நழுவவிடாதீர். தாயகப்பொருளை ஆதரிப்போம்! வெண்புறுவை மீட்போம்!! வேதனையைத் துடைப்போம்! சாவுக்குரலை தவிர்ப்போம்!! தயாராகுங்கள்!!!

★

## ஏஜண்டுகள்

5—1—53-க்குள், தேவைப்படும் மலருக்கான தொகையை முன் பணமாக, கமிஷன் நீக்கி அனுப்பித்தரவேண்டும். அதற்குப் பின் வரும், வேண்டுகோளை நிறைவேற்ற இயலாது. ஆகவே, மலரின் எண்ணிக்கையைக் குறிப்பிட்டு, எழுதக் கோருகிறோம். விலை ரூ. 1 என்பதால் குறிப்பிட்ட அளவே, அச்சியற்றப்படுகின்றன.

## சந்தாதாரர்கள்

ஒவ்வொருவரும் மலருக்கென 0—8—0 தபால் பில்லைகள் அனுப்பித் தந்தால்போதும். 5-ந்தேதிக்குள் விபரம் வேண்டும்.

அருமையாக விளங்கப்போகும் எழில்மிக்க மலர், இந்தப் பொங்கல் மலர்! முந்துங்கள்!!

திராவிட நாடு, நிர்வாகி.

1-ம் பக்க தொடர்ச்சி

'திருப்பணியை', அஞ்சா நெஞ்சத்துடன் செய்துவரும் திருக்கூட்டத்தின் திறத்தைத்தான் என்னென்பது!!

இந்தக் கூட்டத்தின் வரலாறுகளை, அறிந்ததால்தான், மாத்யூ, எச்சரித்திருக்கிறார். "மனித வரலாற்றின் சரிதத்தை எழுதும் போதும்—மறந்திடாதீர்கள். மலை போல் காட்டப்படும், சம்ஸ்கிருதத்தைக் கண்டுவிட்டு, அதுதான் இந்திய இலக்கியப் பொக்கிஷம், சம்ஸ்கிருதம் பேசுவோரே இந்திய உபகண்டத்தின் ஆதிக்குடிகள், என்றெண்ணித் திரும்பிடாதீர்—அந்த நூல்களைப் படித்ததோடு, 'இந்திய இலக்கியத்தைக் கண்டோம்' என்று இருந்திடாதீர். அதைவிட செல்வம் கொழிக்கும் இலக்கிய மொழிகள் இருக்கின்றன. அவைதான் திராவிட மொழிகள்! அவை பேசப்படும் இடத்திலுள்ளோரைப்பற்றி அறியாமல், நாம் உலக வரலாற்றை எழுதி விடுவதென்பது, கூடாது. அப்படிச்செய்தால், அது முடியாத முயற்சி—முற்றுப் பெறாத பணியாகும்", என்பதாக.

இந்த விஷயத்தின்மீது, மேலும் அவர் என்னென்ன பேசினாரோ! நமக்குக் கிட்டவில்லை!! ஆனால், அவர் அதிகமாகவும் அறிவுறுத்தியும்முழக்கமிட்டிருக்க வேண்டும்—ஆகவேதான், இந்தளவுக்காகவாவது நமக்குச் செய்தி எட்டியிருக்கிறது. இந்தச் செய்தியையும் வெள்ளையர் இதழான 'மெயிலே'த்தவிர, வேறெதுவும், விளக்கமாகப் போடவில்லை. எவ்விதம், போடுவர்? இருட்டடிப்புதானே, இன்றைய 'பிரம்மாஸ்திரம்', அவர்களுக்கு.

இருட்டடிப்பின் காரணமாக, ஒரு இனவரலாற்றின் செழிப்புமிக்க பக்கங்களையே, கிழித்தெறியும்திருக்கூட்டத்தின் துணிவை, நினைத்தால் மனம் கொதிக்கும். அதேநேரத்தில் திட்டமிட்டு அக்கூட்டம் செய்யும் வேலைகளைக் கவனித்தால், வியப்பு பெருகும்.

இந்தஅளவுக்கு நம் பெருமையும் நமது இலக்கியமும் மறைக்கப்பட்டிருப்பதை எண்ணும்போது, மற்றோர் கேள்வியும் மனதில் எழும்பத்தான் செய்யும். "இவ்விதம் தமது மொழி, தமதுஇலக்கியம் ஆகியவைகளைமட்டும் உலக்குக் காட்டி, திராவிட இனவரலாற்றை மறைத்து ஒழிக்கும் ஆசை ஏன், ஏற்படுகிறது இவர்களுக்கு?" — இந்தக் கேள்வியைத்தான், நம்மவர், அடிக்கடி கேட்டுக்கொள்ளவேண்டும், தமக்குள். அவ்விதக் கேள்விகள், மாத்யூ எனும் இந்தியத்தூதரின் உள்ளத்தையும் அடிக்கடி உறுத்தியது போலும்—அதனாலேயே இவ்விதம் ஒரு விளக்கம் தந்திருக்கிறார், பாரிஸ் மண்டபத்தில். "நான் இப்படிப் பேசியதால் எனக்கு சம்ஸ்கிருத கலாசாரத்தின்மீது வெறுப்பு என்று எண்ணிடாதீர்கள். அது உலக முழுமையும், தனது தூதர்களைப் பரவ விட்டிருக்கிற, சிறந்த மொழிதான். ஆனால், இந்தியக் கலாச்சாரத்தின் வரலாற்றுக் கண்ணாடி, அதுமட்டுமல்ல, அதைவிடச் சிறந்ததும் இருக்கிறது."

மாத்யூ—நமக்கு அறிமுகமில்லாதவர். நமது பிரச்னைகளை அறிந்தவரா, இல்லையா என்பதும் அறியோம், நாம். ஆனாலும், ஐ. நா. சபையில் முழக்கமிட்டிருக்கிறார்! மனித வரலாறு மறைக்கப்படுவதை கண்டு சோகித்ததின் விளைவுதான், இந்தக் கர்ஜனை!! இவ்விதக் கர்ஜனைகள், எழும்பாமற்போகாது—அறிவு வெளிச்சம் படர, படர. இதனை, 'திருக்கூட்டத்துக்கு' உணர்த்தும் இந்த நேரத்திலே, அவர்தம் அடியார்களாக இருக்கும் ஆசையில் 'ஆரியமாவது, திராவிடமாவது' என்று அலறுகிறார்களே, நமது அருமந்த சகோதரர்கள், அவர்களது பார்வையையும் திருப்ப விரும்புகிறோம். கேட்குது பாரீர், 'திராவிட' ஒலி! அதுவும்—அரசாங்கத்தின் தூதரின் ஆத்திர முழக்கமாக!!

—

## வேண்டாம், விபரீதம்

—

அண்மையில், வடிகட்டும் முறையை எதிர்த்து மாணவர்கள் நடாத்திய அறப்போரின் விளைவாக சில இடங்களில் பள்ளித்தலைவர்கள் மாணவர்கள்மீது பழி வாங்கும் நடவடிக்கைகளை மேற்கொண்டதாக அறியவருகிறோம். சிறிதும் ஆத்திர உணர்ச்சியின்றி, தமது அதிருப்தியைக் காட்டிக்கொண்ட மாணவ அரும்புகளின், கல்விப் பாதையில் 'தடைகளை'ப் போட்டு அவர்கள் வாழ்வை கருகச் செய்வதென்பது, நல்லதல்ல. இவ்வித அடக்குமுறைப் பாதையில் சென்று, 'எதிர்காலத்தின்' சாபத்துக்கு ஆளாகவேண்டாமென, சம்பந்தப்பட்ட பள்ளி நிர்வாகிகளைக் கேட்டுக்கொள்ளுகிறோம். தமக்கேற்பட்ட அநீதி போக்கி, நீதிபெற விரும்பியமாணவர்களை, பள்ளியிலிருந்து நீக்குவதாலும் 'வராதே' என்று விரட்டுவதாலும் ஆத்திரத்தை அடக்கிக் கொள்ளலாமே தவிர — அதனால் ஏற்படும் விபரீதங்களை எண்ணிப் பார்க்கவேண்டும். ஆத்திர உணர்ச்சியால், இளமலர்களை கசக்கி எறிவதென்பது கல்மனதினர் செயல்! இவ்வித நடவடிக்கைகளை மேற்கொள்வோர், கண்ணீர் சிந்தி பள்ளி வாயிலில் நிற்கும் மாணவர்களின் தந்தையரின் இதயம் எவ்விதம் துடிக்குமென்பதைஎண்ணிப்பார்க்க வேண்டும். வத்தலகுண்டிலிருந்து வந்த ஓர் செய்தி, மிகவும் வருந்தச் செய்தது. இவ்வித நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டிருந்தால், அதனை ரத்து செய்து, மீண்டும் அந்த மாணவர்களுக்கு கல்வி ஒளி, கிடைக்குமாறு செய்தல் அவசியமாகும். ஒருநாள் உத்தரவு! பலரது வாழ்வையே, பாழ்படுத்திவிடும். கற்றறிந்தோர், அறியாததல்ல, இது. ஆகவே, ஆவன செய்வார்களென எதிர்பார்க்கிறோம்.

★



## நடக்க இருப்பவை

பொள்ளாச்சி: 6—1—53 செவ்வாயன்று தேர்நிலையில் இரா. நெடுஞ்செழியன் பேசுவார்.

திருத்தணி: 28-12-52 கோவிந்[தசா]சாமி தலைமையில் கலைஞர் மு. கருணாநிதி, இரே. கலியமூர்த்[தி] பேசுவர்,

சேலத்தில்: 28-12-52 ஞாயி[று] காலை 10-மணிக்கு செவ்வாய்[ப்] பேட்டை தி. மு. கழகத்தில் சேல[ம்] நகர தி. மு. க. உறுப்பினர்க[ள்] கூட்டம் நடைபெறும். கமிட்[டி] உறுப்பினர்களும் கிளைக்கழக[ச்] செயலாளர்களும் வருகை தருமா[று] வேண்டுகிறேன் என செயலா[ளர்] ஈ. ஆர். கிருஷ்ணன் எழுதுகிறார்.

Edited Printed & Published by C. N. Annadurai M. A., at "Dravida Nadu" Press, 95, Tirukkachinambi St., Kancheepuram.

